




# மதுரை ஆதீன வரலாறு

## திருஞானசம்பந்தர் குருபூஜை
## விழா மலர்

24-5-1978




மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்,
70, தெற்காவணிமூல வீதி,
மதுரை.

32/1



289-வது குருமகா சந்நிதானம்
ராவ்பகதூர் ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத ஸ்ரீஞானசம்பந்த
தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்



290-வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுவாமிநாத ஸ்ரீஞானசம்பந்த தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள்

உ

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்த குருவே துணை

32/1

# மதுரை ஆதீன வரலாறு


இயற்றியவர்:

இராமநாதபுரம் திரு. தே. சிவஞானம்பிள்ளை அவர்கள்

மதுரை ஆதீன வித்துவான்.


## கடவுள் வாழ்த்து

### தேசிக விநாயகர் வணக்கம்

கருக்கூடி யெண்பானுன் கெனும்பிறவிக்
கடலழுந்திக் கரைகா ணுமல்
வெருக்கூடி யுழல்வேற்காய் வேழமுகத்
தொருகோனை வேணி மீது
மருக்கூடிக் கடுக்கைவல்லி மந்தார
மலரறுகு மணிந்து செல்வத்
திருக்கூடன் மடத்தமர்ந்த தேசிகவி
நாயகனைச் சிந்தை செய்வாம்

### ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர் வணக்கம்

அருமறைப் பொருளாய் நிறைந்த பேரறிவாய்
அனுதியாய் ஆனந்த மயமாய்ப்
பொருவிலா திலகு மொளிக்கெலா மொளியாய்ப்
பொருந்தியும் பொருந்திடாப் பரமன்
கருணையே வுருவாய்ப் பேருடன் ஊருங்
காட்டியிவ் வுலகுய்வான் தோன்றுந்
திருவளர் மதுரை ஞானசம் பந்த
தேசிகன் றிருவடி பணிவாம்.

பரசமய கோளரியைப் பாலரு வாயனைப் பூம்பழனஞ் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞானசம்பந்தப் பெருமானைத் தேயமெல்லாம்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங் கவுணியர்தங்குல
தீபத்தை
விரவியெமை யாளுடைய வென்றி மழவிளங்களிற்றை விரும்பி
வாழ்வாம்

## ஸ்ரீ ஞானசம்பந்த குருமரபின் வரலாறு

(நிலைமண்டில ஆசிரியப்பா)

மலர்தலை யுலகில் மாண்பினைப் பெற்ற
காவிரி பாய்ந்து கழனிக ளெல்லாம்
செந்நெல் விளையும் செழிப்பினைப் பெற்றும்
பூவிரி சோலைகள் புறத்தே யுள்ளதும்
பாவலர் நாவலர் பண்புட னுறையும்
சீர்வளர் சீகாழிச் சிறப்புறு பெயர்முதல்
பன்னிரு நாமங்கள் பாரினிற் பெற்ற
தோணி புரமெனத் தொல்லோர் போற்றும்
வேணு புரமாம் வியன்பதி யதனில்
மறையவர் குலத்தில் வந்தவ தரித்துப்
பொறையருள் தவம்செய் புண்ணிய மிகுத்த
அந்தணர் குலத்திற் சிந்தைநல் வழிசெல்
வெந்திறல் பெற்ற விபுதை யான
பந்தணை விரலியாம் பகவதிப் பெயர்கொள்
சுந்தர வல்லியைத் துணைவியாய்க் கொண்டனர்
இவரிரு வருமே இலகிய சைவத்
தவநெறி யதனிற் சார்ந்தவ ராக
அரவணி சடையார் அடிமல ரன்றிப்

பரவுதல் செய்யாப் பான்மைய ராகி
புனைமலர்க் கோதையும் தானும் பொற்பார்
மனையறம் நடாத்தி மகிழ்வுடன் வாழுநாள்
பூமியிற் சமணும் பொய்ச்சாக் கியரும்
மிகுந்தே வேத நெறிவழக் கொழிந்து
பூதி சாதனம் போற்றல் செய்யாது
ஆதி அரனடி யார்கள் குறைந்து
சிறப்பிலா திருப்பதைச் சிவபாத விருதயர்
கண்டே யரன்பாற் தொண்டே யாற்றிப்
பரசம யங்கள் பாரினில் நீங்க
உரமுள புத்திர னொருவனை வேண்டி
வரமிகக் கிடந்து மனைவியும் தானும்
பெரிய நாச்சியார் பிரியாப் பரமனை
அரிய தவத்தொடு அன்புறப் போற்றுநாள்
தோணி புரத்துத் தொல்லோன் அருளால்
வாழுநாள் அருக்கனும் மன்னிய கோள்களும்
உச்சம் பெற்றே யுரம்பெற் றிருக்கத்
திருக்கிளர் ஆதிரைத் தினத்திற் சமணரின்
தருக்கெலாம் ஒழியச் சைவ சமயம்
பெருக்கமிக் கோங்கிப் பிறங்கு வைதிகமும்
திருநீற் றொளியும் செகத்தினிற் பரவ
வண்டமிழ்ப் பாசுரம் வையத் தோங்கக்
கண்டிகை நீறுங் கவின்பெற அணியும்
தொண்டர் குழாங்கள் துயரிலா தோங்கக்
கழுமலத் துறையுங் கண்ணுத லருளால்
தவமுயர் சண்பையிற் சம்பந்த மூர்த்தி
திருவவ தாரஞ் செய்திருந் தாரே

பிறந்த வுடனே பெறர்க்கருஞ் செய்கை
அரும்பிய புனிதராம் அண்ண லவர்க்குத்
திருந்திய வைதிகச் சிறப்புகள் செய்து
வளர்க்குநாள் அவர்க்கு வயது மூன்ருக
பிதாவின் கூடப் பிள்ளையார் சென்றனர்
தடுக்க அவரும் தந்தைசொற் கேளாது
குளக்கரை நண்ணினர் குழந்தையைக் கரையில்
இருக்கச் செய்து சிவபாத விருதயர்
அகமரு சணத்தை அன்புடன் செய்யக்
காணுது முன்னைக் கருத்துத் தோன்ற
கண்மலர் நீர்த்துளி கசியக் கையாற்
பிசைந்து காழிப் பிரான்திருச் சிகரம்
பார்த்தே யம்மே யப்பாவெனப் பதறிப்
புண்ணியக் கன்று பொருமி யழுதனர்
பிரம புரத்துறை பெம்மா னருளால்
அறம் வளர்த்திடுமெம் அம்மை யிடத்தில்
சிவஞானத் தோடு சேர்த்துப் பாலை
ஊட்டெனச் சொல்ல உண்ணு முலையும்
பாலை யூட்டவே பருகினர் பாலகர்
உண்ட பொழுதே கொண்டனர் ஞானம்
மார்பிற் பால்தான் வடிந்திருப் பதனைப்
பார்த்துப் பிதாதான் பாலனை உறுத்துக்
கோல்கொண் டோச்சக் குழந்தை யழுது
மேலே விடையில் விளங்கும் விமலனைக்
கையாற் சுட்டிக் காட்டி நின்று
தோடுடைச் செவ்வியன் என்னும் சுருதியைப்
பாடித் துதித்தனர் பாலரு வாயரும்
இதனை யுணர்ந்த சிவபாத விருதயர்

அன்று முதலா யவரைத் தேவெனக்
கொண்டே துதித்துக் கூடவே சென்றனர்
ஆளுடைப் பிள்ளையா ரென்றே யவனியோர்
சீருடன் செப்பத் திருஞான சம்பந்தப்
பெயரும் பெற்றுப் பெம்மான் தலங்களில்
பாடிப் பலப்பல பரிசுகள் பெற்றனர்
கோலக் காவிற்பொற் ருளம் கொண்டனர்
திருவருட் டுறையுள் சிறந்த முத்தால்
சிவிகையுங் குடையும் சின்னமும் பெற்றனர்
அந்தணர்க் கெல்லாம் ஐந்தெழுத் துண்மையைப்
பதிகம் பாடிப் பாரினில் விளக்கினர்
வேனிற்கால வெப்பினை நீக்கப்
பட்டீச் சுரத்திற் பகவா னருளால்
முத்துப் பந்தல் முன்வரப் பெற்றனர்
பாச் சிலாச் சிராமத் திருந்த
கொல்லி மழவன் குமாரிக் குற்ற
முயலகன் நோயை முன்னித் தீர்த்தனர்
திருவீழி மிழலையிற் செம்பொன் பெற்று
அடியார் பசிப்பிணி யகற்றியும் துறைசையில்
தந்தையின் யாகச் சடங்கிற் காகச்
சிந்தை மகிழச் சிவனருளாலே
பூதம் ஆயிரம் பொற்கிழி ஒன்று
தந்திட அதனைத் தந்தைகைக் கொடுத்தார்
மருக லதனில் வணிக மாதுக்கு
திருமண மொன்று செய்து வைத்தார்
போதார் மணிமுடிப் புண்ணியன் வதியும்
வேதா ரண்யத்தின் வியன்பெருங் கோவிலிற்
கதவினைத் திறந்து கடவுளை மறைகள்

தரிசித்துக் கதவினைச் சாற்றிப் போக
அதனைத் திறக்க ஆற்றல் இலராய்
வேறு வழியில் விமலனை மக்கள்
கண்டு தொழுது காலங் கடத்தினர்
இதனை யுணர்ந்த எழில்கொள் சம்பந்தர்
நாமு மவ்வழி நணுகலா காதென
அப்பரை யழைத்து அடைத்த கதவைத்
திறக்கப் பாடுக வெனச்செப் பிடவே
திருநாவுக் கரசருந் திறக்கப் பாடினர்
ஆளுடை யரசரும் அடைக்கப் பாடினர்
இப்படி யற்புத மியற்றி யிருக்குநாள்
பாண்டி நாட்டிற் பார்த்திபன் சமண்புக
அரச னெப்படி யப்படிக் குடிகளும்
என்ற பழமொழிக் கியைய நாடெலாம்
சமண சமயம் தான்பர விடவே
பாண்டி மாதேவியும் பண்புறு குலச்சிறை
அமைச்சரும் அதனை யகற்றிடக் கருதிக்
கவலை யுற்றுக் கலங்கிடும் போது
திருமறைக் காட்டிற் றிருஞான சம்பந்தர்
தோன்றிச் சைவம் துலங்கிட அற்புதம்
செய்வ தாகச் சிலர்வந் துரைக்க
பாண்டி மாதேவி பண்புறு குலச்சிறை
அமைச்சரும் சேர்ந்து அடிக ளார்க்கு
ஆண்டகை எங்கள் அரசன் சமண்மதம்
வேண்டின ரவரை விலக்கியும் பூதி
சாதனம் தழைத்துச் சைவம் வளர்ந்திட
வேண்டு மென்றே விண்ணப்பம் விடுத்தனர்

அவர்கள் சென்று ஆளுடை யரசைக்
கண்டே பணிந்து கன்னி நாட்டின்
தீங்கினை யெல்லாந் தெரியப் படுத்தினர்
வருவ தாக வாக்களித் திட்டுத்
திருநாவுக் கரசுடன் செப்ப வதனை
வாக்கரசர் பிள்ளாய் வலியில நாள்கோள்
என்றே யுரைக்க எழில்கொள் சம்பந்தர்
வேயுறு தோழி யென்றதை விளம்ப
நாவுக் கரசரும் நவிலா தொழிந்தனர்
வேத வனத்துறை விமலனைப் போற்றிச்
சிவச் சின்னங்கள் செறிசீ டரோடு
ஆதி யுரையும் ஆலவாய் சேர்ந்தனர்
பரசம யங்கள் பாரினில் நில்லா
வகையினைச் செய்யும் மாண்புறு கோளரி
வந்தா ரெனவே மாதவச் சீலர்கள்
சின்ன மூதித் தெருக்களில் வரவே
பார்த்த சமணர்கள் பதைபதைத் துருகி
கண்டு முட்டெனக் கழறினர் சிலபேர்
கேட்டு முட்டெனக் கிளர்ந்தனர் சிலபேர்
சிரபுரத் தரசும் சிவனைத் தொழுது
ஐவர் தங்களை யறுவ ராக்கும்
மனவலி யுளநம் வாகீச ரெனவே
உளசிவ முனிவ ரொருவர் வந்து
இம் மடத்திலே எழுந்தருள் வீரெனக்
குலச்சிறை யாரு மதனையே குறிக்கத்
தமிழ் விரகருமே தாமதற் கிசைந்து
அடியார் குழாத்தொடு அங்கே தங்கினர்

அமணர்கள் அரசன் அனுமதி பெற்று
மந்திரத் தாலே மடத்தில் நெருப்பை
இரவில் வைக்க எண்ணி முயன்றனர்
பஞ்சாக் கரத்தைப் பயில்வோ ரிடத்தில்
வஞ்சகர் மந்திரம் வலியில வாயின
கண்டே வஞ்சர் கையால் நெருப்பைக்
கொண்டே மடத்தைக் கொளுத்தி நின்றனர்
அதனைக் கண்ட அன்பர் சிலபேர்
இதனைக் காழி வேந்தர்க் கியம்பினர்
வையம் ஆளும் மன்னன் பிழையெனப்
பையவே சென்று பாண்டியர்க் கென்றனர்
அப்பவே கடவு ளருளி னலே
வெப்பு நோயாக வேந்தனை வருத்தின
அன்றே மருத்துவ ரனேகர் வந்து
பார்த்தும் பயனில வாகவே பாண்டியன்
தீர்க்கதர் தம்மைத் தீர்க்கெனச் செப்ப
வஞ்சக ரதனை மாற்றும் வகையிலா
தஞ்சியே நின்றன ரதனை யுணர்ந்த
பஞ்சவன் மனைவியாம் பாண்டிமா தேவி
கெஞ்சியே யரசனைக் கேட்டுக் கொண்டனர்
ஞானசம் பந்தராம் நற்றவப் புனிதர்
தீர்த்திடு வாரெனச் செப்பவே யரசன்
போயழைத் திடுவீர் போயழைத் திடுவீர்
போயழைத் திடுவீ ரெனவே புகன்றனன்
அன்றே யரசியு ம் அமைச்சரும் வந்து
கொன்றை யஞ்சடைக் குழகன் புதல்வரை
நன்றே யழைத்தனர் ஞானசம் பந்தரும்
வந்தே மன்னன் மணிமுடிப் பக்கம்

இட்டபொன் னுசனத் திருந்தனர் கவுணியர்
அப்போ தருகர் அரச னிடத்து
வலப்புற நோயை மாற்றச் சொல்லென
ஞானசம் பந்தரும் நன்றெனச் சொல்லிப்
பூதி பூசிப் போக்கினர் வெப்பை
இடப்பா கத்தில் இரட்டியா யிருக்கத்
தீர்க்க வகையின்றித் திகைத்தனர் அமணர்
பூழியர் கோனும் புகலியர் வேந்தனை
அடிபணிந் திதனையும் அகற்ற வேண்டினன்
கழுமலக் கோனும் கருணை புரிந்து
மந்திர மணியும் மருந்தும் ஆலவாய்ச்
சுந்தரன் மடைப்பள்ளித் தூய நீற்றினை
அள்ளி வரச்சொல்லி அன்பாய்த் தடவினர்
எல்லா நோயும் இனிதே தீர்ந்து
நல்ல வழியை நாடினன் அரசன்
நாட்ட மூன்றுள நாயகன் மைந்தரை
மீட்டும் வாதுக்கு விரும்பி யழைத்தனர்
உங்கள் எண்ணம் எப்படி உரைமின்
என்றே யரசனியம்பினன் அமணரை
நெருப்பிலும் நீரிலும் இருவர் மந்திரத்தையும்
ஏட்டிலெழுதி யிட்டா லவைகள்
எரிந்தது மெதிரே ஏரு ததுவும்
தோற்றது என்றனர் தூய்மை யிலாதார்
வெங்குரு வேந்தர்க்கு விளம்ப அரசன்
சங்கை யிலாது தாமொத்துக் கொண்டனர்
அத்தி நாத்தி யென் றமணர்களெழுதிய
ஏட்டினை யெரியில் இடவே, அவைகள்

தாமதி யாது, சாம்ப ராயின
போகமார்த்த பூண் முலையா ளெனும்
திருப் பதிகத்தின் சிறப்பினை யெழுதிக்
கொச்சை வேந்தர் இச்சையாய் இடவே
பச்சையாய்த் தோன்றின பாரோர் காணவே
அடிகண் மார்களை யரசன் அழைத்து
நெருப்பிற் றேற்று விட்டீரே யென
புனலிலு மொன்று பொருந்தப் பார்த்து
விட்டு, விடுவதாய் விளம்பின ரமணர்
அதனையு மரசன் அனுமதி க்கவே
எண்ணு யிரவரும் எழுதிய மந்திர
ஏட்டை யாற்றி லிடவே யவைதான்
ஒட்டம் பிடித்து உவரிக்கே கின
வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
என்ற பாசுர மெழுதிய வேட்டை
பூந்தராய் வேந்தர், போட்டன ராற்றினில்
மாந்தர்கள் பார்க்க வையை நீர்க்கெதிரே
ஏறி ஏடக மெனும்பதி யடைந்து
அண்டர்கள் போற்றினர் அவனி மாக்கள்
கண்டுங் கேட்டுங் களிமிகக் கொண்டனர்
வேந்தனு மோங்குக வென்ற வியப்பினுல்
அரசனுக் குற்ற அருங் கூனிமிர்ந்து
நின்ற சீர் நெடு மாறனுயினர்
ஆகூ ழில்லா அமணர்க ளெல்லாம்
போகூ ழாலே புலம்பித் தவித்து
தாமே கழுவி லேறித் தவித்தனர்

இதனை யறிந்த ஏனைய அமணர்கள்
நீற்றினைப் பூசி நிமலனைத் தொழுது
சைவ சமயம் சார்ந்து நின்றனர்
தமிழ் விரகராம் சண்பையர் கோனைச்
செழியனு மவரது திருவடி வணங்கி
பாண்டி நாட்டுள பரமன் பதிகளைச்
சேவித்து வரவே செப்பின னரசன்
அன்னதை யுணர்ந்த ஆளுடை யரசும்
மன்னவன் றன்னொடும் மங்கையர்க் கரசியும்
குலச்சிறை யாரையும் கூட்டியே சென்று
பற்பல பதிகள் பணிந்தே பாண்டி
நாட்டினிற் சைவ நலமிகப் பரப்பியும்
திருக் கூட்டத்துடன் சேர்ந்தனர் மதுரை
திருவால வாயான் றிருவடி தொழுது
சென்னி நாடு செல்ல நினைத்தனர்
அன்னதை யுணர்ந்த அரசனு மரசியும்
பிரிவுக் கஞ்சிப் பேதுற் றுர்கள்
இதனை யுணர்ந்த எந்தை சம்பந்தர்
இன்னமு மாலவாய் எம்மிறை யருளால்
பன்னரும் புகழும் பாக்கியம் பெற்று
வாழ்வி ரெனவே ஆசிகள் வழங்கி
மடத்திற்கு வந்து மகிழ்வா யிருந்தனர்



2 – ம் படலம்

## சிவமுனிவர் முதலாயினோர் சந்நிதானங்களின் பெயரும் வரலாறும்

வல்சிவ முனிவரன் மனநிலை யுணர்ந்தும்
கல்வி யொழுக்கம் கடவுட் பக்தி
அடியரைப் பேணும் அருந்தவச் செய்கை
சத்தினி பாதத்து உத்தமத் தன்மை
எல்லா முணர்ந்து மிவர்க்கு மானத
தீட்சை செய்து திருவருள் சுரந்து
உடல்பொரு ளாவி உவந்தே கொண்டு
அத்தக மத்தகத் தருஞ்செய்கை காட்டியும்
திருவடி யதனைச் சென்னியிற் சூட்டியும்
அபிடேகம் செய்து அடியராக்கினர்
சைவ சித்தாந்த சாத்திர முறையாய்ச்
சொக்க லிங்கப் பெருமான் துணையடிப்
பூசனை யதனைப் பொற்புறச் செய்க
எனவவர்க் கருளி யாவரு மறியச்
சிவானந்த யோகீந்த்ரச் சிவஞான சம்பந்தர்
என்னும் தீட்சா நாமம் இட்டு
பாண்டியன் காணிக்கைப் பணத்தையும் பூமியும்
கொடுத்தே சம்பந்த குருவின் மடமென
வழிவழி யாக வழங்கி வரவே
செய்யெனச் சொல்லி திருவாய் மலர்ந்து
அருள்கொடுத் தவரை அங்கே யிருத்தி
அடியார் குழாத் தொடும் ஆலவாய் நீங்கிப்

படியார்ப் போற்றப் பாலரு வாயரும்
கடியார் சோலைக் காவிரி நாட்டுச்
சிற்பரன் கோவில்கள் சேவிக்கச் சென்றனர்
தமக்குக் காழிச் சம்பந்த ரிட்ட
தீட்சா நாமம் சிறந்த பெயராம்
சிவானந்த யோகீந்த்ர சிவஞான சம்பந்தர்
குருவா யமர்ந்து குவலயத் தோர்க்குத்
தீதுதீர் சமய தீக்கைகள் செய்தும்
மாது பாகன் மலரடி மறவாது
மாகேச்சுர பூசை வரம்புறச் செய்தும்
தேவார முதலாம் சித்தாந்த சாத்திரம்
ஓதச் செய்து உவப்புட னிருந்தார்
மாதவர் தமக்கு மாதவன் மலரடி
அடையுங் காலம் அணுகிட அங்கு
அணுக்கத் தொண்டராய் அமைந்த ஒருவரை
சிவஞான மென்ற தீட்சா நாமம்
செய்தே யவரைத் திருஞான சம்பந்த
மடால யந்தான் வழிவழி சிறக்கத்
தேசிகராக்கிச் சிவமய மாயினர்
அப்பாற் குருவுக்கு ஆவன செய்து
தக்கோர் போற்றத் தழைத்தினி திருந்தனர்
மூன்ருவ தாக முறைப்படி சிவப்பிரகாசத்
தேசிகர் குருவாய்த் திகழ்ந்தனர் மடத்தினில்
நான்கா வதாக ஞானப்பிர காசரும்
தோன்றினர் குருவாய் தொன்மை முறைப்படி
இவர்க்குப் பின்னு லிலங்கிய குருமணி
சிதம்பர தேசிக ரெனவே செப்புவர்

பசுபதி தேசிகர் பரமானந்தர்
குருத்தம தேசிகர் குணமிகு நல்ல
பிரணவ நாதர் பின்சிவப் பிரகாசர்
நடன நாத நற்றவ முனிகளும்
திருஞானப் பிரகாச தேசிக ரெனவும்
பசுபதி நாதர் பாண்டிய பூசிதர்
எனவும் ஏகாந்த தேசிக ரென்றும்
மகாலிங்கர் சதாசிவர் மன்னும் உமாபதி
ஆனந்த சுந்தரர் அன்புறு சிவானந்தர்
சதாசிவர் பிரணவேச்சுரச் சச்சிதா னந்தரும்
விசுவநாத பரசிவ வேதநாத மகாதேவர்
நித்தியானந்த சம்புநாத நிகரில் சுயம்புநாதர்
மதுரை நாயகர் சிதம்பர தேசிகர்
மாண்புள கண்ணப்பர் மகா லிங்கரும்
திரிகால சுகானந்தர் சிவானுக்கிரக தேசிகர்
சர்வஞான தேசிகர் சுந்தரலிங்கச் சற்குருவும்
ஞானப்பிர காசர் மகாலிங்க நாதரும்
சோம சுந்தரர் நித்தியா னந்தர்
சுயம்பிர காசர் தெட்சணு மூர்த்தி
நின்மலர் பரஞ்சோதி நிகரில் மந்திரேச்சுரர்
ஆத்ம நாதரும் கைலாச அண்ணலும்
சிவஞான தேசிகர் சதாசிவ தேசிகர்
நிரதி சயானந்த ஞான போதகர்
உலகநாதர் உயர் நந்தீ சரும்
உமா மகேசரும் உயர் பிரகாசர்
சிவானந்தர் சபாநாத தேசிகர் சாமிநாதர்
சகலாகம தேசிகர் சற்குருபரம ஞானர்

யோகப்பிரகாசர் நல்ல உத்தமர் நீலகண்டர்
சித்தநாதர் சத்தினிபாத தேசிகர் பரமானந்தர்
ஞானபோ தகர்வேத நாயகம் சோமசுந்தரர்
சச்சிதானந்த கயிலாய சற்குருசுந் தரலிங்கம்
திரியம்பகர் சபாபதி தேசிக சாம்பசிவம்
சிவசுப்பிர மணியர் சீர்நித்தி யானந்தர்
தாண்டவ ராயர் சத்திய ஞானர்
மதுரை நாயகர் மாதியாக ராஜர்
யோகப் பிரகாசர் ஆனந்த சுந்தரர்
மந்திரேச் சுரர்வேத நாயக மகாதேவர்
தட்சணு மூர்த்தி சதாசிவ தேசிகர்
சுயம்பு நாத ருமாபதி தேசிகர்
விசுவ நாதரா னந்த சுந்தரர்
சுயம்பு நாதர் தியாக ராஜர்
சீகண்ட தேசிகர் சுந்தரலிங்கர்
ஆனந் தேசுர ரருள் மீனுட்சி
சுந்தர தேசிகர் சின்மூர்த்தி தேசிகர்
சாமி நாதர் சற்குரு சித்தாந்தப்
பிரகாசர் அபிடேக சுந்தரப் பெம்மான்
சின்மூர்த்தி சச்சி தானந்த தேசிகர்
நிரதிசயா னந்த நின்மல நற்குரு
சச்சி தானந்தர் சண்மதத் தாபனர்
ஆனந்த பரவசர் சதாசிவ தேசிகர்
ஞான சர்வா னுக்ரக நாதர்
சோமசுந்தரர் சுகானந்த சுந்தரர்
சந்திர சேகரர் நின்மலோத் தமர்
சபாாதி திருவருட் டேசிகர் விஞ்ஞானர்
காளத்தி யீச்சுரக் கண்ணியக் குருவும்



பஞ்சந தேசுர பரம குருவும்
சம்பந்த சரணலய சுயம்பிர காசரும்
கங்கா தரரும் நித்திய ஞானரும்
கருணு லயரும் தேவநா யகரும்
பிரம புரேசர் தவப்பிர காசரும்
உமாபதி தேசிகர் உத்தம ஆனந்த
சுந்தர ரென்ற தூயநற் குருவும்
மறைஞானர் சிவபாத விருதயக் குருவும்
வைராக்கிய தேசிகர் சுந்தர லிங்கரும்
பரசிவ ஞானரும் பஞ்சா னனரும்
தர்மோ பதேசர் ஆனந்தேச் சுரரும்
குருத்தம தேசிகர் மறைஞானக் குருவும்
பெருந்தேவ நாயனர் காளத்தீச் சுரரும்
ஆச்சார்ய சரணர் பரமே சிவரும்
சுந்தர லிங்கர் அருணுசை லேசரும்
வித்தியே சுரரும் பரமே சுரரும்
சிதம்பரர் பரமா னந்த தேசிகர்
கணபதீச் சுரரும் பசுபதி தேவரும்
அம்பிகா பதியும் உலக நாயகரும்
சிவானந்த யோகீந்தரர் கந்தப்ப நாதரும்
மீனுட்சிசுந்தர வித்தகக் குருவும்
சங்கர லிங்கர் சதாசிவக் குருவும்
சுப்பிர மணியர் பஞ்சந தேசரும்
திருச்சிற் றம்பலவ தேசிகர் நடேசரும்
இராமேச தேசிகர் நற்சட்டை யப்பரும்
காழிய யப்பரும் கவின்சொக்க நாதரும்
முருகப்பர் சண்முகர் முனிசவுந் தரரும்

மகாலிங்கர் ஏகநாத தேசி கருமே
ஆனந்த பரவசர் தியாக ராஜகுரு
சதாசிவர் அம்பல வாண தேசிகர்
தோணி புரேசர் சுகானந்த தேசிகர்
உமாபதி தேசிகர் உயர்நெல்லை யப்பர்
மாசிலா மணிகுரு மகாதேவ தேசிகர்
சுவாமி நாதத் தூயநற் குருவும்
சிவலோக நாத தேசிகர் மதுரேசர்
சித்த நாத தேசிகர் கந்தப்பர்
கங்கா தரர்சீ கண்ட தேவரும்
நித்தியா னந்தர் நின்மல மகாதேவர்
பாலரு வாயர் பகர்மந் திரேசர்
அம்பல வாணர் அருள்நீல கண்டர்
பசுபதி தேசிகர் பலவேத நாயகர்
சுப்பிர மணியர் தூயகிரு பாலயர்
சந்திர சேகரர் தனிச்சிவப் பிரகாசர்
மகாதேவர் ஆனந்த பரவச தேசிகர்
மதுரேசர் சிவலோகர் மறைஞான சம்பந்தர்
விசுவ நாதர் மேன்மைக் குருவும்
கலைஞான சம்பந்த கண்ணியக் குருவும்
சுயம்பு நாத தூயநற் குருவும்
சிற்றம் பலவர் சின்மூர்த்தி தேசிகர்
தியாக ராஜர் சீர்க் கந்தப்பர்
சொக்க லிங்கர் சுப்பிர மணியர்
சுந்தர லிங்கர் தூய கணேசர்
தட்சணா மூர்த்தி தகையுறு காழி
ஞான சம்பந்த நற்றவக் குருவும்

மதுரை நாயகர் மன்னிநிந் சம்பந்தச்
சரணா லயரும் தாவிலா மதுரை
நாயகர் பரசிவ ஞானப்பிர காசரும்
சம்பு நாதர் சற்குரு ஆறுமுகர்
பரம காருண்யர் பசுபதிக் குருவும்
சபா நாதச் சுயம்பிர காசரும்
காளத்தி யீசர் கலைச்சச்சி தானந்தர்
சிவபாத தேசிகர் சீர்சர வணோற்பவர்
விசுவ நாதர் விரற்கௌரி வல்லவர்
ஞான போதகர் நற்பக்த வற்சலர்
ஆசார்ய சரணர் அழகிய பிரமபுர
நாயகர் பிரணவ நந்திகே சுரர்
ஆத்மநாதர் அன்புறு நித்தி யேசுரர்
வேலாயுதர் திருவருட் டேசிக வேந்தர்
கடம்பவன சுந்தரர் கலைதேர் சண்முகர்
மகேசுர தேவர் மாண்புறு சண்முகர்
சுவாமி நாத சுகுண தேசிகரும்
அழகிய திருச்சிற் றம்பலர் முத்தமிழ்
விரகர் சிவஞான மேதகு குருவும்
சதாசிவ தேசிகர் சற்சுந் தரலிங்கர்
பொன்னம் பலவர் புகழ்சந் திரசேகரர்
மறைஞான தேசிகர் மாசிற் றம்பலவர்
பசுபதி யுமா மகேசுரர் கைலாயரும்
மறைஞானர் சோம சுந்தரர் சிவஞானரும்
தியாக ராசர் திரிகால தேசிகர்
பாம்பணி நாதர் பரயேக நாதரும்
வயித்திய லிங்கர் மாசுப்பிர மணியர்
அண்ணா மலையார் அன்புறு சரவணர்

ஆறுமுக தேசிகர் அருட்சாமி நாதர்
வழிவழி யாக மதுரையா தீனத்தை
அன்புற நடத்தி யரசு புரிந்தனர்
இவர்க ளெல்லாம் இருநூற் றெண்பத்து
ஒன்பது பட்டம் உலகினி லாண்டனர்
இவர்களில் நூற்று முப்பத்து மூன்ருங்குரு
சம்பந்த சரணலய மூர்த்தி என்பவர்
சித்தாந்த சாத்திரத் தினகர ஞகி
மதுரை யாதீன மடத்தி லிருந்து
அரச ரமைச்சர் அடியவர்க் கெல்லாம்
சித்தாந்த சாத்திரச் செம்பொரு ளுணர்த்தி
ஞான வரசு நடாத்திக் கோவிலில்
சர்வாதி காரந் தான்செய்து வாழுநாள்
சோழ நாட்டில் துறையூரி லிருந்த
வீர மார்த் தாண்ட வேந்தனுர்க்கு
தொன்மை வினையாற் ருெழுநோ யுண்டாக
எத்தனை விதத்திலும் தீராமை யெண்ணி
மதுரைமா நகர்க்கு வந்து சோம
சுந்தரர் தம்மைத் தொழுதுமே ஞான
சம்பந்தர் மடத்தின் தயாபர ரான
சம்பந்த சரணலய மூர்த்தி தாளைத்
தொழுது வணங்கினன் சோழ வரசன்
அன்னதை யுணர்ந்த ஆதீன முதற்குரு
மன்னவன் நோயை மாற்றக் கருதி
முன்னவன் தன்னையும் முதற்குரு வான
திருஞான சம்பந்த தேவனை நினைத்தும்
ஐந்தெழுத் தோதியும் ஆலவா யரன்
நீற்றினைக் கொடுக்க நிருபன் வாங்கி

உடலெலலாம் பூசி உண்ணவுஞ் செய்தான்
இந்த நோயும் ஏழெழு ஜென்மம்
மூந்தை நோயும் முறையாற் றீர்ந்தன
ஆதலா லரசன் அடிகளை வணங்கி
எந்தன் நாட்டுக் கெழுந்தருள் வீரெனச்
சிந்தை மகிழ்வொடு செப்பினன் அரசன்
அன்னவன் தனக்கு ஆசிகள் கூறி
மன்னவன் றன்னிடம் வருகுதும் போமெனச்
சொல்லி யனுப்பினர் தூயநற் குருநாதன்
சின்னாள் கழித்துச் சீகாழிக் கேக
அன்னதைத் யுணர்ந்து அரசனும் வந்து
சற்குரு பாதத் தாளினைத் துதித்து
தன்னது நாட்டிற் தாழ்விலா திருந்த
சிற்பரன் கோவில்கள் சிறப்புற நடக்கத்
தக்க பூமியும் தனங்களும் கொடுத்து
திருவடி பணிந்து சென்றனன் அரசன்
அரையன் கொடுத்த ஆலய மெல்லாம்
விழாக்கள் நடத்தி விருப்புடனிருந்தனர்
இவர்களுள் இருநூற் றெழுபத் தொன்ருங்குரு
பொன்னம் பலவராம் புண்ணிய மூர்த்தி
மதுரையை யாண்ட நாயக்க மன்னருள்
விசுவ நாத வேந்தரும் வித்தக
அரிய நாயக முதலியாம் அமைச்சரும்
அரசுபுரி யுங்கால் அவர்களைச் சீடராய்
பெற்றே மதுரையிற் பிரபல மான
ஆலவாய்ச் சொக்கர் அமர்ந்திடுங் கோயிலின்
சருவாதி காரத் தனிப்பெரும் ஆட்சியை
மாட்சியா யேற்று மகிழ்வுடன் வாழ்ந்தனர்

பின்னர்ச் சுப்பிர மணிய குருவின்
காலம் வரையிற் கடம்பவ னேச்சுரர்
கோவில் விசாரணை குறைவிலா தியற்றினர்
அநேக திருப்பணி ஆபரணு திகள்
உவந்தே செய்து உவப்புட னிருந்தனர்
இருநூற் றெண்பத் தேழாங் குருவாம்
சரவண தேசிக சற்குரு மணிதான்
பாரில் தரும பரிபால கராய்ச்
சிறந்து விளங்கிய சீமா ஞன
பச்சை யப்ப முதலியைப் பண்புள
சீடராய்க் கொண்டு சிறப்புடன் வாழ்ந்தனர்
இருநூற் றெண்பத் தொன்பதாங் குருவாம்
சாமி நாத சற்குரு மூர்த்திதான்
இராம நாதனின் நற்றிருத் தொண்டைத்
தாமே நாடாத்திச் சருவாதி காரமாய்
ஒன்ப தாண்டு உவப்புடன் நடத்தினர்
சைவ சமயத் தனிப்பெரு விளக்காய்
ஞான சம்பந்த நற்குரு போலத்
திருமுறை களைத்தான் தினந்தினம் படித்தும்
தன்னைப் பார்க்க வருபவர் தங்களை
ஒருமுறைக் கிருமுறை ஓதச் செய்தும்
பூதி கண்மணிப் புகழினை விளக்கியும்
நீதியா வாண்ட நிருப ரான
கோதிலாக் குணத்துச் சேது பதியாம்
பாற்கர சேது பதிமகா ராசன்
குருமூர்த் திகள்பாற் கூடிய வன்பால்
திருஞான சம்பந்தர் திருவிழா விற்கு

செந்நெல் விளையும் செந்நிலக் குடிமுதல்
மூன்று கிராமங்கள் முற்றூட் டாகக்
கொடுத்தன ரதனைக் குருமணி பெற்று
நானிலம் புகழ நன்ருய் நடத்தினர்
திக்கெ லாம்புக ழிக்குரு மணிதான்
சைவ சாத்திரத் தன்மையும் தமிழின்
தெய்வத் தன்மையும் சிறப்புறப் பேசி
அடியரை மகிழ்விக்கு மாற்ற லாலே
படியோர் பலரும் பாதந் தொழுது
அடியவ ராக அன்புடன் சேர்ந்தனர்
இமிழ்கடல் வரைப்பில் எவரும் போற்றி
அமிழ்தெனக் கொள்ளும் அருந்தமி ழதனை
அன்புறக் கற்று அழகிய மதுரையில்
தமிழ்ச்சங்க மதனைத் தாபித் தவரும்
அரனடி யவரை அரனெனக் கொண்டும்
சால வனத்தம் தருவதை நீக்கி
பால வனத்தம் பரிபா லித்த
சீலமார் பாண்டித் துரையெனும் சீமான்
கோலமார் குருவாய் கொண்டே யிருந்தனர்
சித்த மாசில்லா தெய்வ சிகாமணி
சத்திய சாமி நாதக் குருதான்
தமக்குப் பின்னல் தம்மடத் திருக்க
உத்தம ரான ஒருவரை வைக்க
பத்தியாய் நினைந்து பரமனைப் பாட
திருநள் ளாற்றுறை தேவ தேவனே
நள்ளா ரெனுமுயர் நகரம் தன்னில்
மானுடன் தாங்கி மன்பெரு முதலியார்

குலத்நிற் ரேன்றி கோதிலா தவராய்
பல்லோ ராலும் பணிந்தே போற்ற
வல்லா ராகிய நம்குரு மணியை
சீர்பெறு ஜயவாண் டானித் திங்களில்
இளவர சாக வெடுத்து எழில்பெறு
சாமி நாதப் பெயரும் சாற்றி
பூமியோர் போற்றப் பொற்புடன் வாழுநாள்
நம்குரு மணிக்கு நாத ராகிய
சாமி நாத சற்குரு மாமணி
மன்மத வாண்டு மன்னிய தையில்
பண்புள மதுரையில் பரிபூர்ண மாயினர்
அன்றே சாமி நாத அண்ணல்
தங் குருவான சாமி நாதற்குச்
செய்கட ஞற்றிச் சிறப்புற வாழுநாள்
அப்போ திருந்த ஆங்கில வரசர்
மாண்புறு மடத்தின் மகிமையைக் கண்டு
இளைய வரசர்தாம் மைனரா யிருந்ததால்
அரசாங் கத்தார் அன்புட னெடுத்து
சாமி நாத சற்குரு மூர்த்திக்கு
வயது பன்னென் ருக மாண்புறு
கார்டியன் நியமித்துக் கல்வி முதலாம்
சீரெலாம் வளரச் செய்து வந்தனர்
ஆங்கில முதலாம் அருமைக் கலைகளும்
வடமொழி தென்மொழி மாண்புறக் கற்றும்
சீலத்துடனே சிறப்புற வாழு நாள்
ஆயிரத் துத்தொள் ளாயிரத் தைந்தாம்
ஆண்டு நவம்பர் அணிபெறு நாளில்

ஜில்லா ஜட்ஜூ சிறப்புற வந்து
எல்லா நலங்களோ டினிதாய்க் கொடுத்தார்
அதனை யேற்று ஆதீன முறைப்படி
பல்லிய மார்ப்ப பரிவாரத் துடன்
ஓதுவார் திருமுறை உவப்புடன் பாடத்
தொண்டர் குழாங்கள் சூழ்ந்திட மீனாட்சி
சுந்தரர் தம்மைத் தொழுதும் பாலரு
வாயராகும் மா பெருங் குருவாம்
திருஞான சம்பந்த தேசிக மூர்த்தியைத்
தொழுதுங் குழாத்தொடு சூழவே வந்து
மடாலயந் தன்னில் மன்னிய முதற்குரு
தாளினைத் தொழுது தமனியக் கொலுவில்
வீற்றிருந் தருள மெயயடி யார்பதம்
போற்றிடப் பூதியும் பூவு மளித்தும்
மாதவர் வாழ்த்த மன்னவர் துதிக்க
வேதியர் தமக்கு வேணது கொடுத்தும்
ஆதவன் போல அழியாப் புகழொடு
சிற்பரன் என்னத் திகழ்ந் திருக்கின்றனர்
இத்தகு சீர்பெறு எங்கள் குருமணி
சத்தியம் தண்ணளி தாங்கித் தரணியில்
நித்தியா னித்தியப் பொருளினை நினைத்து
ஆன்மார்த்த மாக வன்புடன் செய்யும்
மீனாட்சிசுந்தர விமலர் பூசையும்
ஆதீன பரம குரவ ராகிய
திருஞான சம்பந்த தேசிகர் பூசையும்
ஓதுவார் தேவார மோத வின்னிசைக்
கருவிக ளொலிக்கவும் கண்ணிய மாக




நித்தியங் காலையில் நியமப் படியே
தாங்களே பூசை செய்தும் தம்மடி
போற்றுவார் தமக்குப் பூதி கொடுத்தும்
கடவுட்குப் படைத்த சண்ணிய வுணவை
அடியார்க்குக் 'கொடுத்துத் தாங்க ளருந்தியும்'
உத்தம ருடனும் பலகலை ஓதிய
வித்தகருடனும் விருப்புற அளாவியும்
மத்தியானம் மாண்புறு தொண்ட ரொடு
புத்தமு தொத்த புழுக்கல் கறியுடன்
போசன சாலையில் மடைப்பளிப் புலவர்
படைக்கப் பந்தியில் டண்ணொடு ஓதுவார்
தேவார மோதச் சிறப்புடன் குருமணி
ஆசனத் தமர்ந்து, அருளொடு மிருக்க
அணுக்கத் தொண்டராம் அன்புறு தம்பிரான்
பூசனை செய்து பொற்பார் வாழ்த்தொலி
செய்து திருவடி சேவித்து நிற்க
அன்பர்களெல்லாம் அரகர முழக்கம்
செய்யப் போஜனஞ் செய்வது வழக்கம்
இப்படியாக என்றும் நிகழ்வதைக்
கண்கூ டாகக் காணலா மின்றும்
பன்னிருத் திருமறைப் பாராயணஞ் செய்குவர்
மாலைப் பொழுதில் வரும் மாணவர்க்கு
ஆணவ முதலா மரும்பிணி நீங்கச்
சித்தாந்த சாத்திரம் தெளிவுறச் சொல்லியும்
சந்நிதானத்தின் தாளினைத் தொழு வோர்க்குச்
சமயம் விசேடம் சார்ந்திடும் நிருவாண
தீட்சைகள் எல்லாம் தெளிவுறச் செய்குவர்

இலக்கியம் இலக்கண மின்புறக் கற்போர்க்குச்
சொல்லும் ஆற்றல் தோன்றிய சீலர்
வாக்கு வன்மையும் மணி வாசகமும்
சுந்தரத் தோற்றமும் துதைந்திடு ஞானமும்
உடையவ ராதலால் உலகின ரெவரும்
நால்வரு மொருவரா மிவரென நவில்வர்
ஆதுலர் பாவலர் அருந்தவ ரெவர்க்கும்
வேணதைக் கொடுக்கும் விபுத ராவர்
கொடையிற் சிறந்த கோமா ஞகை
அடையாப் பெருங்கடை அணிவாயி லுடையார்
மடையா லெவரும் மகிழ்ந்திட மூவர்பாத்
தொடையாற் கடவுளைத் தொழுதிடுஞ் சீலர்
நங்குரு மணிதான் நலந்தரு மதுரையில்
ஆளுத செல்வ மடியவர்க் கருளும்
மீனுட்சி சுந்தரர் வியன்பெரு கோவிலின்
விசாரணைக் குழுவில் மெம்ப ராகப்
பற்பல வாண்டு பார்த்துப் பகவனின்
அற்புதத் திருவிழா அழகுற நடத்தியும்
தேவார மோதிடுஞ் சிறந்த வோதுவார்
தம்மை யழைத்துச் சாமிக்குப் பின்னுல்
ஒதிவரச் செய் துவப்புடன் கேட்டும்
தக்க வித்வான் தங்களை யழைத்துச்
சமய விளக்கம் தழைத்திடச் செய்குவர்
காலா காலத்திற் கடவுட் பூசை
முட்டின்றி நடக்கப் பட்டரைக் கலந்து
வருவது மிவர்கள் வழக்க மாகும்
தினந் தினந் தேவாரங் கோவிலில் நடப்பது

இவர்கள் முயற்சி யென்றே கூறலாம்
இப்படி யாக விருந்து வருங்கால்
தங்க ளாதீனச் சார்பா யுள்ள
புதுக்கோட்டை யென்னும் பொற்பார் பதியில்
விதுக்கலை வேணியிற் கொண்ட விமலனும்
கவுரி வல்லபக் கடவுள் கோவில்
திருப்பணி செய்து சிறப்புடன் குடமுழுக்
காட்டி யவனியோர் அன்புடன் வாழச்
செய்துந் தினகரன் போல விளங்கியும்
சோழ தேசத்திற் தொன்மைப் பதியாம்
கஞ்சனூர் புறம்பயக் கடவுள் கோயில்கள்
திருப்பணி வேலைகள் செம்மையாய்ச் செய்தும்
கச்சினத் திருக்குங் கடவுட் பணியும்
பன்னதெரு வூர் புகவன் கோயிலின்
நன்னயத் திருப்பணி நாளும் நடாத்தியும்
வருவதை விரைவில் மகிழ்வுடன் முடித்துக்
குடமுழுக் காட்டிக் கூடித் துதிக்க
பன்னகா பரணராம் பசுபதி பதங்களைச்
சொன்மல ராலே துதித்து வருகிறார்
ஏரகத் துறையு மிறைவன் கோவிலில்
வெண்பொன் செம்பொன் விழாக்கள் நடத்தி
அடியார்க் கெல்லாம் அகமகிழ் வூட்டினர்
மதுரையில் வயிர விழாவும் நடத்தி
நாமெலாம் நன்மை யடையச் செய்குவர்
இன்ன மோரற்புத மியம்பக் கேண்மின்
திருஞான சம்பந்த தேசிகர் தமக்கு
வைகாசி மாதம் வருங்குரு பூசையில்
முதல் நாள் பிறப்பு முறையைக் காட்டியும்

இரண்டா நாள் பாலுணல் என்ற விதத்தையும்
கூடவே யிருந்து கோயிலில் நடத்தியும்
மூன்ருநாள் திருமண முகூர்த்தக் கோலத்திற்
சிவிகையி லேற்றித் திரு மடத்திற்குப்
பல்வகை வாத்தியப் பரிவாரத் தொடு
அழைத்து வந்து அருங் குருமணிக்கு
பூசைகள் செய்து பொன்னுடை சாத்தியும்
ஆரவாரத் தொடு ஆவணி மூல
வீதிவரு முயர் விழாவைச் செய்து
அன்றே யறுபத்து மூவரை யழைத்து
ஆதீன முன்பு ஆடைகள் சாத்தியும்
தீபா ராதனை சிறக்கச் செய்தும்
கூடவே வந்து கோவிலிற் சேர்ந்து
திருக் கல்யாணத் திரு மண்டபத்தில்
அடியார் குழாத் தொடு ஆதிக் குருவையும்
தரிசித்துத் தங்கள் மடத்திற்கு வந்து
சம்பந்தர் சோதியிற் சார்ந்த சடங்கினைச்
செய்து காட்டிச் சிவபூசை செய்தும்
மகேஸ்வர பூஜை மாண்புறச் செய்தும்
மாலைப் போதில் மாவித்வான்களால்
சொற்பொழி வாற்றிய துகளறு மொழிகளை
இன்புறக் கேட்டு மினிதா யிருந்தனர்
உன்னைச் சிங்காரித் துன்னழகைப் பாராமல்
என்னைச் சிங்காரித் திருந்திடே னென்ற
பொன்மொழி தன்னைப் புந்தியிற் கொண்டு
தங்கள் பவனி யெல்லாந் தவிர்த்து
எல்லா நலமும் குருவினுக் கென்றே

கோவிலிற் சென்று குருமூர்த்தி தன்னை
கோரத மேற்றிக் கூடவே வந்து
பல்லிய மார்ப்பப் பாவாணர் பாட
நான்காவணி மூல வீதியும் நடந்து
குருவைக் கோவிலிற் சேர்த்து மடத்தில்
வழக்கம் போற் கொலுவில் மன்னியிருந்து
அடியார்க் கெல்லாம் ஆசிகள ருளியும்
படிமீதி லென்றும் பண்புடன் வாழ்கிருர்
இவர்கள் தமக்கு இளவர சென்னத்
தக்கவ ரொருவரைத் தாம்தேர்ந் தெடுக்க
அந்திப் பிறையணி யம்மான் மலரடி
சிந்தித் திருந்தனர் திருவரு ளாலே
என்றுடரும் புகழ் தென்ன டதனிற்
குலசேகரப் பட்டினக் கோதிலா வூரிற்
பிறந்த புனிதர் பேரறி வாளர்
கண்ணியம் பொருந்திய புண்ணிய சீலர்
காராளர் குலத்தில் வேளாள ராகத்
தோன்றிய புனிதர் தொன்மைச் சைவ
நெறியினிற் றவருத நேர்மை யாளர்
வயிரவ நாதராம் மா தவத்தினர்
செய்த சிவபூசைத் திறத்தின லவர்க்குக்
கான்முளை யாகி வந்த கண்ணியர்
சீலமும் ஒழுக்கமுஞ் செறிந்த மேன்மையும்
தாலம் புகழுந் தண்ணளி யாளர்
ஆங்கிலஞ் சிங்களம் அருந்தமிழ் மொழிகளும்
பாங்குறக் கற்ற பாக்கிய வாளர்
சிவபூஜா துரந்தரர் சீர்த்தி யாளர்

நீற்றினை மணியை நிமலனைந் தெழுத்தினைப்
போற்றி வளர்க்கும் புகழ்தனைப் பெற்றவர்
சோம சுந்தர மெனும் தூய நாமத்தர்
ஆவி யுலகொடு அன்புறப் பேசுவோர்
இத்தகு குணமுள வித்தகர் தம்மை
நமக்குப் பின்னால் நம்சிவ ராச
தானியை யாளச் சம்மதமோ வென
சத்தினி பாதத்து உத்தம ராதலால்
திருவரு ளாணை யென்றே சிந்தித்து
உடல் பொருளாவியும் உமக்கே தந்தேன்
என்னை யாட்கொண் டின்னருள் புரிகெனப்
பணிந்தே வணங்கினர் பாரோர் போற்ற
சாமி நாத சற்குரு மூர்த்தியும்
இளவர சென்ன எடுத்தே யாவரும்
உள மகிழ்ந்திடவே உவப்புட னபிடேகம்
செய்தே மடாலயஞ் சிறக்கச் செய்தனர்
அன்னோ ரிருவரும் அவனி தன்னில்
தண்டமிழ் வளர்த்தும் சைவத் தொண்டினைப்
பண்டை யோர் போலப் பாரினிற் காத்தும்
அண்டர்கள் போற்று மணிபெறு மதுரையில்
சைவ சமயம் தழைத்திடச் செய்தும்
தொண்டர் குழாத்தொடு சூழ்ந்தே யிது
பல்லாண்டு பல்லாண்டு பாரினில் வாழ

291-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்



இளவரசுகள்
ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக

இருவர் நடுவ ணிருந்தருள் புரியும்
முருகன் உக்கிர மூர்த்தியா வந்தும்
அரசு செலுத்தி யருமறை யாகம
நெறியையும் செந்தமிழ்த் துறையையு நிறுத்திய
மதுரையம் பதியிற் றுதிபெறுங் காழிக்
கவுணியர் கோமா னவுணரும் வியக்கும்
தீத்தொழில் புரிந்த நாத்திக ரொழிந்து
திருநீறு கண்மணி ஸ்ரீபஞ் சாக்கர
சாதனந் தழைக்கச் சைவத் தாபனம்
செய்து நிறுவிய திருமடா லயத்தில்
வழிவழி யாக மாண்புறு சிவப்பணி
நிகழத் திருவுள நினைந்து வழங்கிய
முதற்பெருங் குரவர் மொய்யொளி தழைக்கும்
சிவானந்த தேசிகச் செல்வ ராவார்
அவர்வழி வந்த ஆதீன கர்த்தருள்
இருநூ றுடனே இயைந்ததொண் ணூறும்
பட்டத் திருந்து பரம்பரை பொலிய
ஞானச் செங்கோல் நடாத்திய நங்கள்
சுவாமி நாதத் தூயபே ராசான்
ஆதீ னத்தி னருட்செய லனைத்தையும்
பேணிப் புரக்கும் பிற்றோன்ற லாகச்
சோம சுந்தர நாமஞ் சூட்டி
வழங்கிய குருமணி வான்சோம சுந்தர
ஸ்ரீஞான சம்பந்த தேசிக ராவார்
செந்தி லாண்டவன் திருவருள் நோக்கால்
வந்தபல் வளங்கள் வாய்த்த திருப்பதி
அங்கயற் கண்ணியோர் பங்குடைச் சொக்க

நாயகன் மலரடி மேயபொன் மனத்துச்
செழிய னெழிற்குல சேகரன் காணச்
சீர்த்தி மிகுங்குல சேகரன் பட்டினம்
செய்தவப் பயனுல் மெய்ம்மைசேர் வேளாண்
மரபினின் மானிடம் வாய்த்ததன் பயனுச்
செய்ய வேண்டுஞ் சிவபூ சையினே
வழிவழி யாக மகிழ்வுடன் செய்து
வருங்குடித் தோன்றிய வயிரவ நாத
பிள்ளை பெற்ற பெறற்கருஞ் செல்வம்
ஆயி ரத்துட னமைந்ததொள் ளாயிரத்
திரண்டா மாண்டினி லேப்ரல் மாதம்
நாளிரு பத்து நான்கில் விசாக
நட்சத் திரத்தி னுனிலத் துதித்தே
இளமைப் பருவத் தியைர்துகற் ருய்ந்த
திருக்குறள் நூலுஞ் சிவஞான சித்தியும்
உதவிய உலகிய லொழுக்கமும் ஞான
போதமுங் கைவரப் பொருந்திய புண்ணியர்
திருவரு ளுறைப்பு மருவிய நலத்தால்
உதித்தவூர்த் திருவருளுயர் நிலைப் பள்ளி
தோன்றிய ததனுட னுன்ற திருவருள்
தவநெறி மன்றமுஞ் சார்ந்து பயன்தரும்
ஈழ நாட்டுக் கிளமையிற் சென்று
கொழும்புமா நகரிற் கோதிலாச் சுந்தரம்
கம்பெனி கண்டு கண்டவர் வியக்க
வெளிநாட் டாருடன் மேம்படப் பழகி
அறவழி வாணிபத் தம்பொரு ளீட்டினர்

கோணுத றவிர்ந்த வாணிபத் துறையில்
பெரும்பொரு ளீட்டி யுறும்பொரு ளுணர்ந்தே
பொருளை யருள்செயும் பொற்பினைக் கைக்கொடு
நில்லா வுலக நிலையினைக் கண்டு
நிலையா முலக நிலையினைத் தெளிந்தார்
செய்த வினையுஞ் செய்தவன் ருனும்
செய்வினைப் பயனுஞ் சேர்க்குங் கடவுளும்
தெளிய வுணர்த்துஞ் சிவநெறிச் சிறப்பை
இறந்தபின் வாழ்க்கை எப்படி யிருக்கும்
எங்ஙனம் அவருட னியைந்து பேசுவ
தென்பன வற்றை யேற்றநூ லறிவும்
அனுபவ வறிவு மமைய வுணர்த்தி
எவரையும் வியப்பி லிருத்துபே ரறிஞர்
ஓரா யிரத்துட னுற்றதொள் ளாயிரத்
தைம்பத் தேழா மாண்டிற் சனவரித்
திங்களி லெங்கணு மங்கள நிறைய
ஞான பீடம் நலம்பெற வமர்ந்தனர்
இதற்கு முன்னர் இளவர சாக
இருந்த பொழுது மெழிலுறுந் தலைவராய்
வந்த பின்னரும் வழிவழி யாகிய
மதுரையா தீன மடாலயப் பணிகள்
நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும்
ஆக வளர்ந்தே யனைவரும் போற்ற
விளங்கு மாண்பினை விளம்பாதார் யார்
ஆவி யுடம்பே மேவுறு சொப்பனம்
காணு முடம்பெனக் கண்டறிந் ததனைச்
செந்தமிழ் மொழியிலும் வந்தவாங் கிலத்தும்

நூல்களின் வாயிலாய் நுவன்றும் மேடைகள்
தோறும் முழங்கியும் வீறு சேர்தரக்
கடவு ளுண்மையைக் காட்டியு மானிடர்
பிரார்த்தனே யாலே பெறற்கரும் பேறுகள்
அனைத்தும் பெறலா மெனத்தந் திறத்தால்
ஆணித் தரமா யறிவித் துணர்த்தியும்
பல்லோர்க் குதவி பண்ணுஞ் செம்மல்
மடா லயத்தில் மாலைப் பூசனே
முடிந்த பின்னர்ப் படிந்தபே ரன்புடன்
கூடும் அடியவர் கூட்ட மகிழப்
பொருள்பொதி நல்லுரை புகலுஞ் சிறப்பை
இருநிலத் தறியா தேவருள் ளனர்
சென்னையில் மதுரையிற் சீர்பெறு மிந்து
தர்மப்ர சார சங்கம் நிறுவி
ஆத்திகம் பரப்பு மரும்பெற லாசான்
தூயபொன் மேனியில் மேய கண்டிகை
கொத்துத் தாழ்வடம் வித்தகக் கரசிர
மாலைகள் பூண்டு வருபவ ரெவர்க்கும்
செய்வன தவிர்வன செப்புஞ் செம்மல்
சைவநன் னெறியின் தனிப்பெருஞ் சிறப்பை
அறியா தாராய்ப் பிறிதோர் மதத்தைச
சார்ந்து வாழ்ந்துபின் சைவஞ் சார
விரும்பி வந்தவர் வியத்தகு சைவ
உண்மையை உணர வொண்மைகள் காட்டி
நல்லுப தேசம் நல்கும் குருபரன்
மதுரையா தீன மடாலய வருவாய்
இடையிற் குறைபட் டிளைப்பை அடைந்ததால்

அன்புடன் இரண்டு நூறுயிரம் வெண்பொன்
வழங்கியா தீனம் மாண்புற வைத்தனர்
முன்னையாச் சிரமத்து முனைந்துதா மீட்டிய
பொருளையா தீனம் புரக்க வழங்கிய
அருட்பெருஞ் செல்வர்நம் அடிகளார் ஒருவரே
ஈழ நாட்டி லிருந்த போழ்தினில்
மேல்நாட் டவரும் வியக்கும் நடையுடை
பாவனை யுடனே பயின்றதை நேரில்
கண்டவர் மடாலயக் காட்சியிற் குரவரைக்
கண்டவர் கோலக் கவினில் மயங்கி
நின்றதைப் பலரும் நேரி லறிவர்
சொக்க நாயகர் பக்கத் திருக்கும்
கரிய மாணிக்கப் பெருமாள் மண்டபத்து
மன்னுறு சோம வாரந் தோறும்
கூட்டு வழிபாடு நாட்டிய பெரியோர்
செவ்வாய் வெள்ளி திகழ்தரு நாட்களில்
அடியவர் குழுவுடன் செடியொழித் தாட்கொளும்
ஆலவா யண்ணலின் கோலமார் கோயிலைத்
திருமுறை யோதி யிருமையும் பயன்றர
வலம்வரும் சீர்த்தி வரைவதற் கெளிதோ
திருக்குறள் வகுப்பு சிறக்கும் புதனில்
சாத்திர வகுப்பு மீத்திகழ் வியாழனில்
பள்ளிமா ணவர்தம் பயிற்சிப் பேச்சு
சனியிலு மடாலயந் தன்னி னடைபெறத்
திட்டஞ் செய்த திருவுடை யேந்தல்
ஞாயிறு தோறு மீயுயர் மதுரைத்
திருத்தலத் திருக்குஞ் சீரிய கோயில்கள்

எங்கணுஞ் சென்றே யிந்து தர்மப்
பிரசார சங்கப் பெரும்பணி யாக
விரிவுரை வழங்கும் மேதகு வித்தகர்
ஆதீன ஆட்சியி லமைந்து விளங்கும்
கைச்சினம் புறம்பயம் கஞ்சனூர் பன்ன
தெருவென வுள்ள திருத்தலம் நான்கிலும்
திருப்பணி முடித்து விருப்புறுங் குடமுழுக்
காட்டிநித் தியமு மமையுநை மித்திக
பூசையுஞ் சிறக்கப் புரிதரு புண்ணியர்
யாவருங் கற்றுத் தாவறு முணர்வு
சேர்ந்திடச் செய்யுந் திறத்தினி னூல்பல
எழுதிப் பதிப்பித் தினிதில் வழங்கும்
பழுதில் புலமை முழுதுறும் பண்பினர்
வெளிநாட் டினர்க்கும் வழிகாட் டுங்குரு
கைரேகை நாடிக் கலைகளி னுண்மையை
அனுபவ பூர்வமா யறிந்த கலைஞர்
சீடர்க ளன்பிற் செய்திடும் பணியா
மடாலயப் பூசை மடத்திற் றிருமுறை
கல்லி லெழுதிக் கவினுற வைத்தும்
ஞானசம் பந்த நற்குரு சந்நிதி
இராய கோபுரம் எழிலுற வெழுப்பியும்
இன்னன பற்பல இயல்புறச் செய்தும்
திருவரு ளவர்பாற் றிகழ்தரப் புரிந்தவர்
உடற்பிணி மனப்பிணி யொல்லையி னீக்கும்
பூசை நீற்றை ஆசையிற் பெறுவோர்
கூட்டம் நாளு மீட்டமா மடத்தில்

திருவுளங் கொண்டே யருள்புரி ஆசான்
இளவர சொருவரை யிருத்திட வெண்ணினர்
பத்துட ஞென்பான் பயின்ற நூற்றின்
பின்னர் நாற்பானிற் பிணைந்த வைந்தாள்
ஆண்டினி லேப்பிர லணிமுத லாம்நாம்
விசாகநாள் மீனில் மேதகும் உடன்குடிப்
பதிவே ளாளர் பரம்பரைக் குமார
சாமிவேள் பெற்ற சற்குணர் கைத்தல
இரேகை சாத்திர மியம்பு முண்மையைத்
தெரிந்தழைத் தவர்க்குத் தீட்சைகள் வழங்கி
இராட்சச இடபத் தியைந்த மூலநாள்
அதனி லருண கிரிநாத ஸ்ரீஞான
சம்பந்த தேசிகத் தழைதிரு நாமம்
சாத்தி நிறுத்தினர் தந்தை எப்படி
மைந்தனப் படியெனு மாணுரைக் கேற்ப
இளவர சாக இருக்குங் குருமணி
முன்னோர் சென்ற முறையி னின்று
ஞான பிதாவி னல்லடி பரவி
ஆதீ னத்தின் அருட்பணி யெல்லாம்
மேதக நிகழ வீற்றிருக் கின்றனர்
தன்னையொப் பரிய சைவமுந் தமிழும்
நீணிலத் தென்றும் நிலவுற மதுரை
ஆதீன குரவ ராலவா யண்ணல்
அருட்பே ருருவா யமர்ந்தினி திருக்க
அவரிணை மலரடி யகமிருத் துவமே.

நலமே தழைக.



